7th September 1960]

*Text-books*

*489 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of SRI N. K. PALANISAMI) : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) with reference to the answer given to question No. 838 on 27th April 1960 whether a committee has been constituted for the publication of Tamil books for 1961–62; and

(*b*) if so, the manner in which subjects are to be selected for the same?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) & (*b*) Government do not propose to publish Tamil text-books for use in schools during the year 1961–62. The question of constituting a committee does not therefore arise now.

*490 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) 1960-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 27-ந் தேதியில் 838 நெ. கேள்விக்கு பதிலில் கூறியபடி அரசாங்கம் பாடப்புத்தகம் தயாரிப்பதற்கு அனுஷ்டிக்கும் முறை என்ன ?

(ஆ) இதற்காக ஏதேனும் கமிட்டி அமைக்கப்பட்டிருக்கிறதா ?

(இ) அப்படியானால், அதன் உறுப்பினர்கள் யார் ? அவர்களின் தகுதி என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Government have now undertaken the publication of English text-books for Standards V, VI and VII. The English text-book for Standard V published by them, is in use in schools from the current year. The book was prepared by Sri S. Palaniswamy, M.A., L.T., Deputy Director of Public Instruction. He is also preparing the book for Standard VI for use in 1961–62. Tamil text-books will be published by Government from 1961–62 for Tamil use in 1962–63 only. It has been decided to entrust the work of preparation of books to a panel of authors and to select the best books.

(*b*) No, Sir.

(*c*) Does not arise.

SRI M. KALYANASUNDARAM அரசாங்கம் வெளியிட்டிருக்கக்கூடிய புத்தகங்களை பள்ளிக்கூடங்களில் பாட புத்தகங்களாக ஏற்றுக்கொள்ளுவதற்கு தானாகவே அரசாங்கம் உத்தரவு போடுகிறதா ? அல்லது டெக்ஸ்டு-புக் கமிட்டிக்கும், அந்தப் பள்ளிக்கூடங்களுக்கும் அந்த விஷயம் விடப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : 'டெக்ஸ்டு-புக் கமிட்டி' அதற்கு ஆதரவு கொடுக்கவேண்டும். அதற்கு பிற்பாடுதான் பள்ளிக்கூடங்களுக்கு அந்தப் பாட புத்தகங்களை வைக்க முடியும்.